# முன்னுரை

*தமிழ் ஹைக்கூ படைப்புகளில் ஒரு சோதனை முயற்சி. தமிழ் ஹைக்கூ நூல்கள் பல காதல், சமூகம்,இயற்கை பண்பாடு, போன்றவற்றை சார்ந்து எழுதப்பட்டது.*

*காலங்களின் மாறுதலுக்கேற்ப சிந்தனைகளில் சற்று புதுமைகள் புகுத்தி, புத்தகமாக வடிக்கிறேன்.*

*'' தமிழின் முதல் எந்திர கவி ஹைக்கூ புத்தகம்.''*

***"எதார்த்த உலகில் இயற்கையோடு நாம் கடக்கும் எந்திரங்களும், இனி தினம் கவி பேசட்டும்"***

*என்ற ஒற்றைவரி தொகுப்புகளே .,*

***டெக் ஹைக்கூ....!***



விரலோடு விழியோடு  தொடரும்
வசியம்

நவீன கால போதைப்பொருள்

**கைபேசி...!**

***(Cell Phone)***



ஒட்டிக்கொள்கிறது உன்மேல்
ஒருதலை காதல்

நீ விழ  நான் உடைகிறேன்

***Tempered glass…!***




இடைவிடா தீண்டலின் விளைவு
உருவாகிறது

தீண்டாமை இல்லா ஓர் உலகம்

**தொடுதிரை…!!**

***(Touch Screen)***




பட்டறிவு பகுத்தறிவு வேறுபாடுகள்
கலைகிறது

மை தடவா கைநாட்டில்

***Finger Print…!!***



*ஆண்களின் ஆபரண ஆசைகள்*
*நிறைவேறுகிறது*

*காதோரம் இசைத்தோடுகள்*

**கேட்பொறி**

***(Headphone)…!!***



உயிர் தரும் செயற்கைத்தாய்

நவீன காலத்து தொப்புள்கொடி

***மின்னூட்டி...!!!***

***(charger)***



ஆடம்பரதொழில்நுட்பங்களின் ஈர்ப்பு
விசை

கண்டும் காணாமல் நகரும்
ஏழை ஸ்டீவ் ஜாப்ஸ்கள்

***ஐபோன்...!***

***(IPhone)***



செயல் படா மனித செயல்கள்

தினம் தீர்மானிக்கும் புது நிறுவல்கள்*(Install)*

**செயலி…!**

***(App)***




*கூட்டிப்பெருக்கா 6 அங்குல வாசல்*

*ஆண் பெண் பாகுபாடின்றி போடும் மாக்கோலம்*

***Pattern lock...!***



*செயலற்ற மனிதர்களின் செயலிகள் மேற்கொள்கிறது*

*நவீன கால சிறுசேமிப்புத் திட்டங்கள்*

***Battery saver…!***




வெள்ளைக்கோடுகளில்
ஒட்டிக்கொள்ளும் ரோடுகள்

இணைய இணைப்பு கிடைக்கும்வரை
தொடரும் தேடல்

*Google Maps…!*



முடிவில்லா பக்கங்கள் கொண்ட
செய்தித்தாள்

தடவலில் தொடரும் வாசிப்புகள்

*News Feeds…!*




*சமூக அவலங்கள் தாங்கி நிற்கும்*
*கேலிச்சித்திரங்கள்*

*படித்தவன் செதுக்கும் சிற்பம்*

***போன்மி...!***

***(Memes)***



விசைப்பலகையில் விரல் கொஞ்சும்
புது மொழி

இணைய வழி இதய தொடர்பு

***புலனம்…!***

***(WhatsApp)***




உணர்வுகள் சுமக்கும் உயிரில்லா
பொம்மைகள்

மௌனமொழி பரிணாமம்

***Emoji…!***



*பகிர்ந்து வாழும் பழக்கம் மெல்ல குறைகிறது*

*இரவு நேர hotspot தரவு*

***Share...!***



இதழோடு இதழ் பரிமாற்றம் ஏனோ

எச்சில் சுமக்கும் தொடுதிரை

***video calling…!***



இருவிரல் காட்டி நாவை கொஞ்சம் நீட்டி

சிரிப்பை தொலைத்த புகைப்படம்

***தாமி…!***

***(Selfie)***




மெருகேற்ற பூசப்படும் புகைப்பட
சாயம்

அழகு சாதன பொருட்கள் மிச்சம்

***Filters…!***



அழகில்லா அழுக்கு முகம் ஆறங்குல

திரையில் கிளியோபாட்ராவாய்
உருமாறும்

***Candy Cam…!***




அடைமழை அனல் வெயிலிலும்
உதவா குடை

அலைவரிசையின் அடைக்கலம்

***Dish Antenna***



ஓர் பெருவிரல் தீண்டலில் முற்றும்

என் இமை தேடல்கள்

***ரிமோட் ...!***

***(Remote)***



மதுபோதை ஏதுமில்லை

தண்ணீரில் தள்ளாட்டம்

*Washing Machine…!*



ஐநூறு மரங்கள் வெட்டி கட்டிய
மாளிகை

துப்புகிறது மின்சாதனம்  குளிர்காற்று

*Air Cooler ...!*



விறகில்லா புகையில்லா அடுப்புகள்

வியர்வை வரா சமைக்கும் மாடர்ன்
மகளிர்

*Micro Wave Oven…!*




பதப் படுத்தப்படும் பழையசோறு

அழிவின் விளிம்பில் ஆரோக்கியம்

**குளிரூட்டி....!**

*(Refrigerator)*



வெட்டுண்டு விழும் என் ரோமங்கள்
காரணமாகும்

உன் இதழ் முத்தங்கள்.

***Trimmer…!***




*சில்லறை இல்லா வர்த்தகம்*
*உருவாக்கும்*

*பணக்கார பிச்சைக்காரன்*

## *டெபிட் /கிரெடிட் கார்ட் ...!*

## *(Debit / Credit Card)*



தொடுதிரை ஓரம் நீர்ப்படலம்

எச்சில் தொட்டு புத்தகம் திருப்பும்
தாத்தாவின் கணிப்பலகை

**இபுக் ...!**

***(E-Book)***



இறக்கை இல்லா பறவைகள்
வட்டமிட்டு

ஆகிறது வான்வெளி குப்பைகள்

***செயற்கைக்கோள்...!***

***(Satellite)***




*ஆறாம் அறிவின் அவசரநிலை*
*உண்டாயின*

*சிந்தனைகளின் ஆயுள்தண்டனை*

***Google…!***




# அள்ளிக்குவிக்கும் தள்ளுபடி விற்பனை

# கட்டைப்பை இல்லா கார்பரேட் கடைகள்

***Amazon / Flipkart***



மருந்தறிந்த மருத்துவர் நாளும்
கேட்கும்

*Ear* வழி இதய பாடல்.

***Stethoscope …!***




மேடுபள்ளம் வாழ்க்கையை
உணர்த்தும் நிழற்படம்

இதயமிட்ட கை யொப்பம்

*ECG ...!*



*பிடிக்காத பாடங்களில் முதன்மை*
*ஆகிறது கணிதம்*

*0,1 ஐ தாண்ட வில்லை இன்றும்*

***கணினி …!***

***(Computer)***



சிலிகான் சிப்களில் வளரும் சிந்தனை

ஆறறிவின் ஆர்வக்கோளாறு

*CPU (Central Processing Unit) …!*



உயிர் இல்லா *wire* இனம்

இருவிரல் தொடல் குற்றமல்ல

***Mouse ...!***



பழையதை மறக்கும் எந்திரங்கள்
உணர்த்துகிறது

இது மனித கன்டுபிடிப்பு

*RAM ...!*




எதிர்பாலினம் பெற்ற வரம்
நினைவாற்றல் புலப்படுகிறது

இக்கால சேமிப்பு சாதனங்களில்

*Pen Drive…!*




*காற்றில்லா ஜன்னல்கள் காட்டுகிறது*

*மடியில் ஓர் உலகம்*

***Windows…!***




இலக்கில்லா மனித இனம்
இலக்காகும்

நான்கு இலக்கு எண்கள்

**கடவுச்சொல்...!**

***(Password)***



*முப்பரிணாமத்தின் அதீத வளர்ச்சி*
*மின்னுகிறது*

*வறண்ட விளைநிலங்களும்*
*வயல்வெளியாய்*

***Graphics …!***



உடலில்லா உடம்பில் உண்டான
நோய்

மருந்து இல்லா தீர்வு

***Virus …!***




அளவுகோல் இல்லா கோடுகள்*(coding)*
நிர்ணயிக்கிறது

எங்கள் மாத சம்பளம்

**மென்பொருளாளர் …!**

***(Software Engineer)***



காற்றின் தரவுகளில் கனமாகும்
கணினிகள்

உருவமில்லா உன்னத சேமிப்பான்

*Cloud Computing …!*




பாதுகாப்பில்லா உலகம் பாதுகாப்பு
வேண்டி நடத்தும்

எண் எழுத்துகளின் கலப்பு திருமணம்

*Cipher Text…!*



கர்பம் தரிக்கா தொழில்நுட்பம்

பெற்றெடுக்கும் பிள்ளை

**செயற்கை நுண்ணறிவு ...!**

***(Artificial Intelligence)***




முடிவு காணும் மனித இனம்

தினமெழுதும் ஓர் முடிவுரை

***Shutdown …!***

# ஆசிரியர் குறிப்பு

என் பெயர் **விக்னேஷ் .M** ,

கவிதை படைப்புகளில் இது என்

**ஏழாவது புத்தகம்.**தமிழ் மேல்

கொண்ட பற்றை , பயின்ற

கணிப்பொறியியல் வழி

மேம்படுத்தும்

நோக்கத்தோடு,மின்னணு புத்தகங்கள்

எழுதத் தொடங்கி, இன்று என்

ஏழாவது புத்தகத்தை

வெளியிடுகிறேன் . மேலும் தமிழ்

மொழி

வளர்ச்சிக்காகவும் ,சுயஎழுத்தாளர்களி

ன் படைப்புக்களை மின்னணு

மாற்றமாக பதிப்பிட வழிவகைசெய்யவும்,**மின்கவி**”*(https://www.minekavi.com )* என்ற வலைத்தளத்தை உருவாக்கி நிறுவியுள்ளேன்.

தனிமனித அடையாளம் உருவாக்கும் நோக்கத்தோடும், இக்காலத்திற்கேற்ப எளிய வரிகள் கொண்ட கவிதைகள் படைக்கும் நோக்கத்தோடும் மின்னணு புத்தகங்களை ***Amazon Kindle Direct Publishing*** வழி படைத்து வருகிறேன்.

மேலும் என் படைப்புகளை *freetamilebooks.com* தளத்திலும் பதிவிட்டு வருகிறேன்.

***“வாசகர்களாகிய தங்களின் மேலான ஆதரவும் மற்றும் புத்தகம் தொடர்பான***

